கலைமகள்

# கதா வாசகம்

(இரண்டாம் புத்தகம்)






எடுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனி,
ஜார்ஜ் டவுன், சென்னை.
[விலை 0-3-0]
1934.

கலைமகள்

# கதாவாசகம்

இரண்டாம் புத்தகம்

---

## 1. நாயும் அதன் நிழலும்

ஓர் ஊரில் ஒரு நாய் இருந்தது. அது அதிக பேராசையுள்ள நாய்.

ஒரு நாள் அது தீனி இல்லாமல் பசியால் வருந்தியது. அங்கும் இங்கும் திரிந்தும் ஒன்றும் அகப்படவில்லை. கடைசியில் அது கடை வீதியில் ஒருமாமிசத் துண்டைத் திருடியது.

தான் திருடின மாமிசத் துண்டை அது வாயில் கௌவிக்கொண்டு போயிற்று. வழியில் ஓர் நீர் ஓடை இருந்தது. அதைக் கடந்து செல்ல குறுக்கே ஒரு பலகை போடப்பட்டு இருந்தது. நாய் அந்தப் பலகையின்மீது ஏறிச் சென்றது.

நாய், பலகையின்மீது நடந்துபோகையில், கீழேயுள்ள தண்ணீரைப் பார்த்தது. அதில் அதன் நிழல் காணப்பட்டது. வேறொரு நாய்

மாமிசத் துண்டைக் கௌவிக்கொண்டு நிற்பதாக எண்ணி, அது அந்த மாமிசத் துண்டையும் பிடுங்கிக்கொள்ள ஆசைப்பட்டது.



உடனே தண்ணீரில் தோன்றின நாயின் வாயில் தோன்றிய மாமிசத் துண்டைப் பிடுங்குவதற்காக அது தன் வாயைத் திறந்தது. அதன் வாயில் இருந்த மாமிசத் துண்டு தண்ணீரில் விழுந்து ஓடை நீரோடு ஓடிப்போய்விட்டது.

நாய் தன் வாயிலிருந்த மாமிசத் துண்டையும் இழந்துவிட்டு மனம் வருந்தித் தன் இருப்பிடம் சென்றது.

பேராசை பெரு நஷ்டம்

# 2. சேவலும் நரியும்

சேவல் ஒன்று ஒரு மரத்தின் உச்சியில் உட்கார்ந்து உல்லாசமாய்க் கூவிக்கொண்டு இருந்தது. அச்சமயத்தில் ஒரு நரி அங்கு வந்தது.

நரி சேவலைப் பார்த்ததும், அதை எப்படியாவது பிடித்துத் தின்னவேண்டும் என ஆசைப்பட்டது; அதை எப்படிப் பிடிக்கலாம் என்று கொஞ்ச நேரம் யோசனை செய்தது. கடைசியாக, நரி சேவலைப் பார்த்து, "நண்பனே! க்ஷேமந்தானா?" என்று கேட்டது.



சேவல், "க்ஷேமந்தான். இங்கு நீ வந்த விசேஷம் என்ன?" என்று கேட்டது.

நரி, "உனக்குத் தெரியாதா? இனி மிருகங்களும், பறவைகளும் ஒன்றையொன்று கொன்று தின்னாமல், சினேகமாய் இருக்கவேண்டும் என ஏற்பாடு செய்திருக்

கிறார்களே. இது உனக்குத் தெரியாதா? இனி நரிகள் கோழிகளைத் தின்னமாட்டா. ஆகையால், நீ பயமில்லாமல் கீழே இறங்கிவந்து, என்னோடு சிநேகமாய்ப் பேசிக்கொண்டு இருக்கலாமே" என்று சொல்லிற்று.

"அப்படியா? எனக்குத் தெரியாதே. அது நல்ல ஏற்பாடுதான். இனி நாமெல்லோரும் சிநேகிதர்கள் ஆகிறோம். அதனால்தான் உன் சிநேகிதர்கள் இதோ வந்துகொண்டு இருக்கிறார்கள் போலும்" என்று சேவல் பதில் அளித்தது.



சிநேகிதர்கள் வருகிறார்கள் என்பதைக் கேட்ட உடனேயே நரி கொஞ்சம் நடுங்கிக்கொண்டு "என் சிநேகிதர்களா? யார் அவர்கள்? எங்கே வருகிறார்கள்?" என்று சேவலைக் கேட்டது.

"நரியாரே! ஆம், ஆம். உன் சிநேகிதர்

கள் தான். இதோ, வேட்டை நாய்கள் வருகின்றன பார்! அவை இனி உன் சினேகிதர்கள் தானே?” என்று சேவல் மறுமொழி கூறிற்று.

அதைக் கேட்டதும் நரி ஓட ஆரம்பித்தது. சேவல் அதைப் பார்த்து, “ஏன் ஓடுகிறாய்? நாம் எல்லோரும் சினேகிதர்கள் அல்லவா? ஓடாதே” என்று சொல்லிற்று.

நரி, தன் தந்திரம் வெளிப்பட்டதற்கு வெட்கமடைந்து, “ஆம்! ஆம்! அந்த நாய்கள் என் சினேகிதர்களே. ஆனாலும், நாம் எல்லோரும் சினேகிதர்கள் ஆனோம் என்ற செய்தி அவர்களுக்குத் தெரியாமல் இருக்கலாம்” என்று கூறிக் கொண்டே மிக வேகமாய் ஓடிப்போயிற்று.

வஞ்சகம் பேசேல்.

---

# 3. ஓநாயும் ஆடும்

முன்னொரு காலத்தில் ஓநாய் ஒன்று ஓர் ஓடையண்டை வந்து தண்ணீர் குடித்துக்கொண்டு இருந்தது. அப்போது ஓர் ஆட்டுக் குட்டியும், அதே ஓடையில் கிழக்கே கொஞ்ச தூரத்தில், தண்ணீர் குடிக்க வந்தது.

தாகம் தணிந்தவுடன் ஓநாய், திரும்பிப் பார்த்தபோது, அந்த ஆட்டுக்குட்டியைக் கண்டது. "ஆஹா! என்ன அதிர்ஷ்டம்! இந்த ஆட்டுக்குட்டியை எப்படியாவது நான் அடித்துத் தின்ன வேண்டும்" என்று தனக்குள்ளே எண்ணிக் கொண்டது.



பிறகு, ஓநாய் ஆட்டுக்குட்டியண்டை வந்து, "அடே அற்பனே! நான் குடிக்கும் நீரைக் கலக்குகிறாயா? உனக்கு என்ன தைரியமடா?" என்று அதட்டிக் கேட்டது.

ஆட்டுக்குட்டி உடல் நடுங்கிக்கொண்டு, "பெரியாரே! ஜலம் உம்மிடமிருந்து நான் இருக்கும் முகமாக அல்லவோ ஓடிவருகிறது. நீங்கள் குடிக்கும் தண்ணீரை நான் கலக்க முடியாதே" என்று அடக்கத்துடன் சொல்லிற்று.

ஆட்டுக்குட்டியை எப்படியாவது அடித்துத் தின்னவேண்டும் என்பது ஓநாயின் எண்ணம். ஆகையால், அது ஆட்டுக்குட்டியைப் பார்த்து, "அது போகட்டும். நீ என் என்னை ஒரு வருஷத்திற்கு முன் திட்டினாய்?" என்று கேட்டது.

ஆட்டுக்குட்டி பயந்து, "எஜமானனே! நான் பிறந்து ஆறு மாதங்கள்கூட ஆகவில்லையே. ஒரு வருஷத்திற்கு முன் நான் உங்களை எப்படி வைதிருக்க முடியும்?" என்றது.

"அப்படியா! நீ இல்லாவிட்டால் உன் பெற்றோர் என்னைத் திட்டி இருக்கவேண்டும்" என்று சொல்லிக்கொண்டு, ஓநாய் ஆட்டுக்குட்டியின்மீது ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து, அதைக் கொன்று தின்றது.

வலுச்சண்டைக்காரர்களுக்குக் காரணம் பேரிதல்ல

---

## 4. உலோபி

முன்னொரு காலத்தில் ஓர் ஊரில் உலோபி ஒருவன் இருந்தான். அவன், சம்பாதிக்கும் பணத்தைத் தான் அனுபவிக்காமலும், பிறருக்கும் உதவாமலும் ஒரு மரத்தின்கீழ் புதைத்து வைத்திருந்தான்.

தான் புதைத்து வைத்திருக்கும் திரவியம் சரியாய் இருக்கிறதா வென்று பார்ப்பதற்காக, அந்த உலோபி நாள்தோறும் மரத்தண்டை சென்று தான் புதைத்து வைத்த பணத்தை எடுத்து எண்ணி எண்ணிப் பார்த்துவிட்டுத் திரும்பவும் அதைப் புதைத்து வைப்பான்.

இவனது லோபித்தனத்தைக் கண்டு பலர் இவன்மீது வெறுப்புக் கொண்டார்கள். ஒருநாள் இவன் வழக்கம் போல் புதைத்து வைத்த பணத்தை எண்ணிப் பார்த்துவிட்டு மறுபடியும் புதைப்பதை ஒரு திருடன் பார்த்துக்கொண்டு இருந்தான். உலோபி வீட்டுக்குத் திரும்பினதும், அத்திருடன், புதைத்திருந்த பணத்தை எடுத்துக்கொண்டு, பள்ளத்தை மூடிவிட்டுப் போய்விட்டான்.

மறுநாள், உலோபி வழக்கப்போல் புதைத்த பணத்தைப் பார்ப்பதற்காக மரத்தண்டை சென்று, குழியைத் தோண்டிப் பார்த்தான்..

பணம் இல்லாததைக் கண்டு அவன் திடுக்கிட்டு அலறி அழுதான்.



அப்போது அங்கு அவ்வூர் மனிதர்கள் சிலர் வந்தார்கள்; உலோபி அழுவதைப் பார்த்து "ஏன் அழுகிறீர்" என்று கேட்டார்கள்.

உலோபி, "சிநேகிதர்களே! நான் இந்த அநியாயத்திற்கு என்ன செய்வேன்? சம்பாதித்த பணத்தை யெல்லாம் ஒருகாசுகூட செலவழிக்காமல் புதைத்து வைத்திருந்தேன். அதை யாரோ திருடிக்கொண்டு போய்விட்டார்களே" என்று அழுதான்.

உடனே அவர்கள் உலோபியை நோக்கி, "ஐயா! இதற்காகவா வருந்துகிறீர்? உமக்குத் தான் அந்தப் பணம் பிரயோஜனம் இல்லையே. பணத்திற்குப் பதிலாக சிறு கற்களை எண்ணிப் புதைத்து வைத்தால் போதுமே. ஏன் வருந்து கிறீர்?" என்று கூறிப் பரிகாசம் செய்தார்கள்.

தனந்தேடி உண்ணுமல் புதைக்கவேண்டாம்

——————

# 5. இரண்டு சிநேகிதர்கள்

ஓர் ஊரில் இரண்டு சிநேகிதர்கள் இருந் தார்கள். அவர்கள் ஒருவரை விட்டொருவர் பிரிய மாட்டார்கள். இவர்களை ஜனங்கள் உத்தம சிநேகிதர்களெனப் புகழ்ந்து கூறுவதுண்டு.

ஒருநாள் அவர்கள் இருவரும் அயலூருக் குப் போக நேர்ந்தது. வழியே ஒரு காட்டுமார்க்க மாய் அவர்கள் போய்க்கொண்டு இருந்தார்கள். உல்லாசமாய்த் தங்கள் நட்பின் பெருமையைப் பற்றி அவர்கள் பேசிக்கொண்டே போகையில், திடீரென ஒரு கரடி வந்தது.

அவர்கள் இருவரில் ஒருவனுக்கு மரம் ஏறத் தெரியும். கரடிக்கு மரம் ஏறத் தெரியாது

என்பதை அறிந்து, அவன் தன் நண்பனை விட்டு விட்டு ஒரு மரத்தின்மேல் ஏறிக்கொண்டான். மரம் ஏறத் தெரியாதவன், நடுநடுங்கிக் கொண்டு என்ன செய்வதெனத் தெரியாமல், திகைத்து நின்றான்.



கரடியோ கீழே இருந்தவனுக்கு அருகில் வந்து விட்டது. உடனே அவன் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள ஒரு நல்ல யுக்தி செய்தான். கரடி செத்த பிணத்தைத் தின்னாது 'என்பதை 'அவன் அறிவான். ஆகையால், அவன் தரையில்

படுத்துக்கொண்டு, மூச்சையடக்கிப் பிணம்போல் கிடந்தான்.

கரடி இவன் இருப்பிடம் வந்தது. இவனைச் சுற்றிச் சுற்றி வந்து மோந்து பார்த்துவிட்டுப் பிணம் என்று நினைத்துப் போய்விட்டது.

கரடி வெகுதூரம் சென்றபின், கீழே படுத்து இருந்தவன் எழுந்தான். மரத்தில் இருந்தவன் கீழே இறங்கி, அவனிடம் வந்து, "நண்பா! கரடி உனக்கு என்ன ரகசியம் சொல்லிற்று?" என்று கேட்டான்.

அதற்குக் கீழே யிருந்தவன், "ஆபத்துக் காலத்தில் உதவாத சினேகிதனை ஒருபோதும் நம்பாதே என்று சொல்லிற்று" என்று பதில் அளித்தான்.

---

## 6. வயிறும் அவயவங்களும்.

ஒரு காலத்தில் உடம்பில் உள்ள அவயவங்களுக்கும் வயிற்றிற்கும் சச்சரவு உண்டாயிற்று. கால், "நான் உடம்பை எங்கு வேண்டுமானாலும் சுமந்து செல்லுகிறேன். எனக்கு ஒரு ஆகாரமும் கொடாமல் வயிறு தானே தின்றுவிடுகிறதே" என்றது.

கை, "நான் வேலை செய்கிறேன். ஆகாரத்தை எடுத்துக் கொடுக்கிறேன். எனக்கு ஒன்றும்



இல்லாமல் வயிறு சும்மா இருந்து கொண்டு உணவைத் தின்கிறதே" என முறையிட்டது.

வாய், "கை தரும் உணவை நான் மென்று வயிற்றுக்கு அனுப்புகிறேன். வயிறுவேலை ஏதும் செய்யாமலேயே தின்றுகொண்டு இருக்கிறது" என்று கூறிற்று.

இம்மாதிரியே, மற்ற அவயவங்களும் தம் தம் குறைகளைக் கூறின. முடிவில், வயிறும் சேர்ந்தாலொழிய உழைப்பதில்லையென எல்லா அவயவங்களும் வேலை நிறுத்தம் செய்தன.

சில நாட்கள் கழிந்தன. ஆகாரம் இல்லாமல்

அவயவங்கள் மெலிந்து தளர்ந்து சோர்வடைய ஆரம்பித்தன. அவை இப்படியே இருந்து விட்டால் தங்களுக்கே துன்பம் நேரிடும் என்பதையும், வயிறு வேலை செய்யாமல் சும்மா இருப்பது போல் தோன்றினும் தங்களுக்கு வேண்டிய உணவை அது அனுப்புகிறது என்பதையும் கண்டு அறிந்து, தங்கள் வேலையைச் செய்ய ஆரம்பித்தன.



ஒப்புர ஒழுகு

---

## 7. யார் பூனைக்கு மணி கட்டுவது

ஒரு வீட்டில் பல எலிகள் சேர்ந்து கூடி விளையாடிக்கொண்டு, எல்லாவற்றையும் கடித்துத் தின்றுகொண்டு இருந்தன. எலிகளைப் பிடித்துக்

கொல்ல வீட்டுக்காரன் ஒரு பூனையை வளர்த்து வந்தான்.

இரவில் எலிகள் சாமான்களைத் தின்ன வெளியே வரும்போது, பூனை அவற்றைப் பிடித்துத் தின்று வந்தது. எலிகள் தங்களில் பலர் இறப்பதைக் கண்டு, பூனைக்குத் தப்பிப்பிழைக்க ஓர் உபாயம் செய்வதற்காகக் கூடிப் பேசின.



ஒவ்வொரு எலியும் ஒவ்வொரு யோசனை சொன்னது. அப்போது ஒரு சுண்டெலி முன்வந்து, "பூனை சத்தம் செய்யாமல் திருட்டுத் தனமாய் வருவதாலன்றோ நாம் அகப்பட்டுக்

கொள்ளுகிறோம். பூனை வருவது நமக்குத் தெரிந்தால் நாம் ஓடி ஒளித்துக் கொள்ளலாம் அல்லவா! இதற்குப் பூனையின் கழுத்தில் ஒரு சிறு மணியைக் கட்டிவிட்டால், மணிச்சத்தம் கேட்டவுடன் நாம் ஓடித் தப்பித்துக் கொள்ளலாம்" என்று கூறிற்று.

மற்ற எலிகளெல்லாம் அதைக்கேட்டு அச் சுண்டெலியைப் புகழ்ந்து, "இனி பூனைக்குப் பயப்பட வேண்டியதில்லை" என்று சந்தோஷப் பட்டன. அப்போது ஒரு கிழ எலி முன் வந்து, "யார் பூனையின் கழுத்தில் மணியைக் கட்டுவது?" எனக் கேட்டது.

எலிகள் அதற்குப் பதில் சொல்ல முடியாமல் ஒன்றின் முகத்தை ஒன்று பார்த்துக்கொண்டு விழித்தன.

சொல்வது சுலபம், செய்வது கடினம்

---

## 8. ஆமையும் முயலும்

ஒருநாள் ஒரு முயல் ஓர் ஆமையைச் சந்தித்தது. ஆமை மெள்ள நகருவதைக் கண்டு, "ஆமையே! உன்னைப்போல் மந்தமாய் நடப்பவர்கள் இல்லவே இல்லை. நீ ஏன் வேகமாய் நடக்கக் கூடாது?" என்று முயல் கேட்டது.

ஆமை, "நான் மெள்ள நகருவது உண்மை தான். இருந்தாலும் பந்தயத்தில் நான் உன்னைத் தோற்கடிப்பேன்" என்றது.



"நீயா என்னைத் தோற்கடிப்பாய்? போதும், போதும். ஏன் டம்பமான வார்த்தைகளைப் பேசுகிறாய்" என்று முயல் பரிகாசம் செய்தது.

"ஓஹோ! நான்தான் தோற்கடிக்கிறேன் என்று சொல்லுகிறேனே. உனக்குப் பந்தயம் போடப் பயம் என்று சொல்லக்கூடாதா?" என்று ஆமை முயலைக் கேலி செய்தது.

இரண்டும் பந்தயம் பேசிக்கொண்டு ஓடச் சம்மதித்து, நரியை மத்தியஸ்தமாக வைத்துக் கொண்டன. முயல் ஒரே பாய்ச்சலாய் ஓடி வெகு தூரம் முன்னே போயிற்று. ஆமையோ மெள்ள நகர்ந்துகொண்டு பின்னால் வந்தது.

நடுவழியில் முயல் களைத்துப் போனபடியால்



சிறிதுநேரம் தூங்கி விட்டு, ஆமை வருவதற்கு முன் எழுந்திருந்து ஓடலாம் என்று எண்ணிப் படுத்துக் கொண்டது.

ஆமையோ நிற்காமல் நகர்ந்து கொண்டே போயிற்று. ஆமை குறிப்பிட்ட இடத்தைச்சேரும் சமயமாய் இருந்த போது முயல் விழித்துக் கொண்டு பார்த்தது. ஆமை முன்னே செல்லுவதைக் கண்டதும் முயல் வெகு வேகமாய்ஓடிற்று. ஆனல், 'முயல் அவ்விடம் சேருவதற்குமுன் ஆமை சேர்ந்துவிட்டது.



வீரியம் பேசேல்

# 9. அரசமரமும் நாணலும்

ஓர் ஆற்றங்கரையில் ஒரு பெரிய அரசமரம் ஓங்கி வளர்ந்திருந்தது. அங்கே நாணல்களும் நிரம்ப வளர்ந்திருந்தன.



அரசமரம் நாணலைப் பார்த்து, "நீ மிகவும் பலம் இல்லாதவனாய் இருக்கிறாயே. ஒரு சிறு காற்று அடித்தாலும்கூட வளைந்து ஆடுகிறாயே. என்னைப் பார். நான் காற்றை லக்ஷியம் செய்யாமல் நிமிர்ந்து நிற்கிறேன். புயல்காற்று

அடித்தால் நீ அடியோடே விழுந்து விடுவாய் போலிருக்கிறதே" என்று கர்வத்தோடு பரிகாசம் செய்தது.



இப்படி யிருக்கையில், ஒரு புயல்காற்று அடித்தது. நாணல் தலை வணங்கி, வளைந்து வளைந்து ஆடிற்று. அரசமரம் வளையாமல் நின்றது. காற்று மேலும் மேலும் பலமாய்

அடித்தது. அரசமரம் வேரோடு கீழே விழுந்தது. நாணல் வளைந்துகொண்டு இருந்ததனுல் தப்பிற்று.

கேடு வரும் பின்னே
மதி கெட்டு வரும் முன்னே.

---

## 10. தெரியாமற் கிடந்த புதையல்

ஓர் ஊரில் குடியானவன் ஒருவன் இருந்தான். அவன் நிலங்கள் வெகு நாளாய் வெட்டு வெட்டாமல் இருந்ததால் பயிர் நன்ருய் விளையாமல் இருந்து வந்தது. அவன் தன்னுடைய குமாரர்களுக்கு எவ்வளவு சொல்லியும் அவர்கள் வயலைப் பண்படுத்தாமல் இருந்தனர்.

ஒரு நாள் குடியானவன் தன் பிள்ளைகளை வயலுக்கு அழைத்துச் சென்று, "பிள்ளைகளே! இந் நிலத்தில் புதையல் இருக்கிறது. நீங்கள் வெட்டி எடுத்து பங்கிட்டுக் கொள்ளுங்கள்" என்று சொன்னுன்.

உடனே, பிள்ளைகள் ஆவலுடன் வயலை வெட்ட ஆரம்பித்தார்கள். வயல் முழுதும் பிரயாசைப்பட்டு வெட்டியும் புதையல் எதும்

அகப்படவில்லை. பிள்ளைகள் ஏமார்ந்து விசனமாய் இருந்தார்கள்.



அப்போது, மூத்த குமாரன் மற்றவர்களைப் பார்த்து, "நாம் மிகவும் சிரமப்பட்டு வெட்டியும் புதையலைக் காணோம். வயலை நன்றாய் வெட்டி விட்டோம். ஆகையால், விதையை விதைத்துப் போகலாம்" என்று சொன்னான்.

எல்லோரும் வயலில் விதை விதைத்துச் சென்றார்கள். பயிர் நன்றாய் வளர்ந்து கதிர் விட்டது. அதற்கு முன்பு அம்மாதிரி பயிர்

விளைந்ததே கிடையாது. குடியானவன் தன் பிள்ளைகளுடன் வயலைப் பார்க்கச் சென்றான்.

வயலை அடைந்ததும் குமாரர்களில் ஒருவன், "வயலை வெட்டினால் புதையல் கிடைக்கும் என்று சொன்னீர். நாங்கள் கஷ்டப்பட்டு வெட்டிப் பார்த்தும் ஒன்றும் அகப்படவில்லை" என்று தகப்பனாரைப் பார்த்துச் சொன்னான்.



தகப்பன் பிள்ளைகளுக்கு விளைந்திருக்கும் பயிரைக் காட்டி, "புதையல் அகப்படவில்லை என்று ஏன் சொல்லுகிறீர்கள்? இப்பொழுது

நன்றாய் விளைந்திருக்கும் பயிரைவிட மேலான புதையல் என்ன இருக்கிறது? அது நீங்கள் பாடுபட்டதனாலன்றோ உங்களுக்குக் கிடைத்தது'' என்று சொன்னான்.

அதிலிருந்து நிலத்தில் பாடுபட்டால் லாபம் அடையலாம் என்பதைக் குமாரர்கள் அறிந்து கொண்டார்கள்.

சீரைத் தேடின் ஏரைத்தேடு

---

## 11. பால்காரியின் கனவு

ஒரு பால்காரி வழக்கம்போல் தன் கிராமத்திலிருந்து ஒரு குடம் பாலைத் தலைமேல் வைத்துக் கொண்டு அருகிலுள்ள பட்டணத்திற்கு வியாபாரம் செய்யப் போனாள்.



வழியில் போகும் போதே தனக்குள்ளே பின்வருமாறு யோசிக்கலானாள்: "இந்தப் பாலை விற்று லாபம்

பெறுவேன். அந்தப் பணத்திற்குக் கோழிகள் வாங்குவேன். கோழிகள் முட்டையிடும். அந்த முட்டையிலிருந்து கோழிக் குஞ்சுகள் கிளம்பும். குஞ்சுகள் பெரிதானதும் கோழிகளை விற்பேன். இம்மாதிரியே செய்தால் எனக்கு அதிகப்பணம் கிடைக்கும். நான் பணக்காரி ஆவேன். அப்போது ஊரில் உள்ள பணக்காரிகள் என்னுடன் பேச வருவர். நான் அவர்களை மதியேன். தலையை ஆட்டி விட்டுத் திரும்பிக் கொள்ளுவேன்.''



இப்படிச் சொல்லிக் கொண்டே தலையை ஆட்டி விட்டுத் திரும்பிக் கொண்டாள்.

உடனே, தலைமேலிருந்த பால் குடம் கீழே விழுந்து உடைந்து போயிற்று; பாலும் தரையில் வழிந்து ஓடிற்று.

மேன்மேலும் கனவு கண்டவள் போல் யோசனை செய்ததால், அன்று பாலை விற்றுக் கிடைக்கும் பணம்கூட அவளுக்கு இல்லாமற் போயிற்று. பால்காரி விசனம் அடைந்து வீடு திரும்பினாள்.

செருக்கடைந்தால் கேடு விளையும்

---

## 12. ஒற்றுமையில்லாத பிள்ளைகள்

ஓர் ஊரில் ஒரு குடியானவன் இருந்தான். அவனுக்கு நான்கு குமாரர்கள் இருந்தார்கள். இவர்கள் ஒற்றுமை இல்லாமல் ஒருவரோடு ஒருவர் சண்டை செய்துகொண்டு இருந்தார்கள். குடியானவன் அவர்களுக்கு எவ்வளவு புத்தி சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை.

குடியானவன் வயது முதிர்ந்த கிழவனானான். தன் குமாரர்கள் ஒற்றுமை இல்லாமல் இருக்கிறார்களே என்று ஏங்கி இருந்தான். கடைசியாக, அவர்களை ஒற்றுமையாய் இருக்கச் செய்வதற்கு அவன் ஓர் உபாயம் செய்தான்.

குடியானவன் தன் பிள்ளைகளை அழைத்து

வைத்துக்கொண்டு, தன் வேலைக்காரனை ஒரு கட்டு சுள்ளி கட்டிக் கொண்டுவரச் சொன்னான். வேலைக்காரன் சுள்ளிக் கட்டைக் கொண்டுவந்ததும், குடியானவன் தன் மூத்த குமாரனைப் பார்த்து அதை முறிக்கச் சொன்னான். அவன்



தன்னால் ஆனமட்டும் பார்த்தும் அதைமுறிக்க முடியவில்லை. மற்ற மூன்று குமாரர்களையும் அப்படியே ஒடிக்கச் சொன்னான். அவர்களாலும் அதை ஒடிக்க முடியவில்லை.

பிறகு, குடியானவன் பிள்ளைகளைப் பார்த்து

"பிள்ளைகளே! கட்டை அவிழ்த்து ஒவ்வொரு குச்சியாய் எடுத்துக்கொண்டு ஒடியுங்கள்" என்றான்.



பிள்ளைகள் குச்சிகளைத் தனித்தனியே சுலபமாய் ஒடித்துவிட்டார்கள்.

குடியானவன் தன் பிள்ளைகளைப் பார்த்து, "இக்குச்சிகள் சேர்ந்து கட்டாய் இருந்தபோது உங்களால் ஒடிக்க முடியவில்லை. கட்டை அவிழ்த்து விட்டுத் தனித்தனியாய் வைத்ததும்

சுலபமாய் ஒடித்து விட்டீர்கள். இம்மாதிரியேதான் உங்களுக்கும்” என்று சொன்னான்.

ஒத்து வாழ்ந்தால் ஊரையும் வெல்லலாம்.

---

## 13. பக்காத் திருடன்

ஓர் ஊரில் முனியன் என்ற ஒரு திருடன் இருந்தான். அவன் வெகு சாமர்த்தியமாகத் திருடுவான். பிறர் கையில் அவன் என்றும் அகப்படுவதே இல்லை.

ஒரு நாள் முனியன் ஒரு தோப்பில் புகுந்து, தேங்காய் திருடத் தென்னை மரத்தில் ஏறினான். அவன் மரத்தின் உச்சியில் இருக்கும் போது, தோப்புக்குச் சொந்தக்காரன் அவனைப் பார்த்து விட்டான். முனியன் உடனே கீழே இறங்க ஆரம்பித்தான்.

சொந்தக்காரன் முனியனைப் பார்த்து “அடே திருடா! என் மரத்தில் ஏறி என்னடா செய்கிறாய்?” என்று கேட்டான்.

முனியன் பதற்றம் சிறிதும் இல்லாமல், “என் கன்றுக்குட்டிக்குப் புல் அரிந்துகொண்டுவர மரத்தில் ஏறினேன்” என்றான்.

சொந்தக்காரன் முனியனைப் பார்த்து, "என்ன! கன்றுக்குட்டிக்குப்புல் அரிந்துகொண்டு வரவா ஏறினாய்! தென்னை மரத்தின்மீதா புல் இருக்கும்?" என்று கோபத்துடன் கேட்டான்.



முனியன் அப்போதும்கூட சிறிதும் பயம் இல்லாமல், "புல் இல்லாததனால்தான் இறங்கி விட்டேன்" என்று சொல்லிக்கொண்டே கீழே குதித்து ஓடிப்போனான்.

---

# 14. நரியும் நண்டுகளும்

ஒரு நாள் நரி ஒன்று ஓர் குளக்கரையில் உட்கார்ந்துகொண்டு ஊளையிட்டு அழுதது. அக் கரையில், நண்டுகள் வளைகளில் வசித்து வந்தன. அவை நரியின் அழுகுரலைக் கேட்டு வெளியே வந்து, நரியைப் பார்த்து, 'ஏன் அழுகிருய் ?' என்று கேட்டன.



நரி, "எனது உறவினர் என்னைக் காட்டிலிருந்து துரத்திவிட்டனர். நான் தனியாய் இருக்கவேண்டுமே என்று அழுகிறேன்" என்று சொல்லிற்று.

நண்டுகள், "உன்னை ஏன் அவர்கள் துரத்தி விட்டார்கள் ?" என்று கேட்டன. அதற்கு நரி, "நான் அவர்களோடு நண்டுகளைப் பிடித்துத் தின்ன வரமாட்டேன் என்று சொன்னேன்.

அதற்காக அவர்கள் என்னைத் துரத்திவிட்டனர்" என்று பதில் சொல்லிற்று.

நண்டுகள் நரியின்மீது இரக்கம் கொண்டு, "பாவம்! அழாதே! இனி நீ எங்களோடு இரு. நாங்கள் உன்னைக் காப்பாற்றுகிறோம்" என்று அதற்குத் தேறுதல் சொல்லின.



சில நாட்கள் சென்ற பிறகு பௌர்ணமி வந்தது. அன்று இரவு சந்திரன் நன்றாய்ப் பிரகாசித்தான்.

நரி நண்டுகளைப் பார்த்து, "நாம் வெளியே போய் நிலாவில் உலாவி வரலாம் வாருங்கள்" என்று அழைத்தது.

நண்டுகள், நரியின் வார்த்தையை நம்பி, அதனுடன் சென்றன. சிறிது தூரம் போனதும் அங்கே மரங்கள் அடர்ந்த காடு ஒன்று

இருந்தது. அங்கு வந்ததும் நரி உரக்க ஊளை



இட்டது. உடனே அங்கிருந்த நரிகளெல்லாம் ஓடி வந்து நண்டுகளைக் கொன்று தின்றுவிட்டுப் போயின.

துஷ்டர்கள் பேச்சை நம்பலாகாது

---

## 15. இரண்டு தவளைகள்

ஒரு காலத்தில் கோடைக்காலம் மிகவும் கொடுமையாய் இருந்தது. குளங்கள் ஆறுகள் எல்லாம் வரண்டு போயின.

ஒரு நாள் இரண்டு தவளைகள் தண்ணீர் இல்லாமல் தாகத்தால் வருந்தின. வெகு நேரம் அலைந்த பிறகு அவைகள் ஒரு கிணற்றண்டை வந்தன. அந்தக் கிணற்றில் கொஞ்சம் தண்ணீர் இருந்தது. அதைக் கண்டதும் ஒரு தவளை தண்ணீர் குடிக்கக் கிணற்றிற்குள் குதித்தது. மற்ருென்று கிணற்றின் சுவரின் மீது உட்கார்ந்து கொண்டு இருந்தது.



கிணற்றில் இருந்த தவளை மற்ருென்றைப் பார்த்து, "ஏன் மேலே இருக்கிருய்? இங்கு தண்ணீர் நன்ருய் இருக்கிறதே. குதித்துவா" என்று சொல்லிற்று. வெளியே இருந்த தவளை, "நீ சொல்வது சரிதான். தண்ணீர் இனிப்பாய் இருக்கலாம். ஆனல் நான் குதிக்கமாட்டேன். இதிலும் தண்ணீர்

வற்றிவிட்டால், நீ வெளியே வருவது எப்படி?" என்று பதிலளித்தது.

ஆழம் தெரியாமல் காலையிட்டுக் கொள்ளலாகாது

---

## 16. ஆடும் ஓநாய்களும்

ஒரு காலத்தில் இரண்டு ஓநாய்கள் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. வரவர சண்டை பலமாயிற்று. அவைகள் ஒன்றையொன்று பற்களால் கடித்துக் கொண்டும் கிழித்துக் கொண்டும் இருந்தன.

அந்தச் சமயத்தில் அங்கு ஓர் ஆடு வந்தது. ஓநாய்கள் சண்டை யிடுவதைப் பார்த்து, "ஐயோ! ஏன் வீணாய்ச் சண்டை போடுகிறீர்கள்? இருவரும் நேசமாய் இருக்கலாகாதா?" என்று ஆடு புத்தி சொல்லிற்று.



இதைக் கேட்டதும் ஓநாய்கள் சண்டையை

நிறுத்தின. ஆட்டினிடம் சென்று வந்தனம் செய்வதுபோல் நடித்தன. கடைசியில், அவை



கள் ஆட்டின் மீது ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து அதைக் கொன்று தின்றன.

துஷ்டர்களோடு சகவாசம் செய்யலாகாது







THE LAW PRINTING HOUSE, MOUNT ROAD, MADRAS

## தமிழ் பிரசுரங்கள்

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சுவாமி விவேகானந்தர் ... ... | 0 | 10 | 0 |
| கலைமகள் நற்றமிழ் வாசகத்திரட்டு for Form IV | 0 | 10 | 0 |
| ,, ,, ,, V | 0 | 12 | 0 |
| செந்தமிழ் இலக்கணம் Book I | | | |
| திரு. ராகவாசாரியார் (I, II, III பாரங்களுக்கு) | 0 | 8 | 0 |
| ,, for IV பாரம் ... | 0 | 5 | 0 |
| பெஞ்சமின் பிராங்க்லின் ... ... | 0 | 6 | 0 |
| ஆப்ரஹாம் லிங்கன் ... ... ... | 0 | 6 | 0 |
| விசித்திர விளக்கு ... ... ... | 0 | 6 | 0 |
| இந்துஸ்தானத்து வீரர் ... ... | 0 | 5 | 0 |
| சந்திரகுப்தர் ... ... ... | 0 | 4 | 0 |
| நீதிக் கட்டுரைக்கோவை முதற்பாகம் ... | 0 | 4 | 0 |
| ,, இரண்டாம்பாகம் ... | 0 | 7 | 0 |
| கலைமகள் நீதிக்கதைகள் ... ... | 0 | 4 | 0 |
| உலக அதிசயங்கள் ... .. ... | 0 | 4 | 0 |
| முப்பெரும்புலவர் ... ... ... | 0 | 4 | 0 |
| வாழ்க்கைச் சரிதை ... ... ... | 0 | 4 | 0 |
| கலைமகள் வாசகம் 1-ம் வகுப்பு ... ... | 0 | 2 | 6 |
| ,, 2-ம் ,, ... .. | 0 | 3 | 0 |
| ,, 3-ம் ,, ... ... | 0 | 4 | 0 |
| ,, 4-ம் ,, ... ... | 0 | 5 | 0 |
| ,, 5-ம் ,, ... ... | 0 | 6 | 0 |
| தமிழ் இலக்கணம் ... ... | 0 | 4 | 0 |
| கலைமகள் கணிதநூல் Book I ... ... | 0 | 5 | 0 |
| ,, II ... ... | 0 | 6 | 0 |
| ,, III ... ... | 0 | 8 | 0 |
| ,, IV ... ... | 0 | 9 | 0 |
| வடஆற்காடு ஜில்லா பூகோளம் Tamil & Telugu | 0 | 4 | 0 |
| செங்கற்பட்டு ஜில்லா பூகோளம் ... ... | 0 | 5 | 0 |
| இந்துதேச சித்திரசரித்திர கதைகள் முதற்பாகம் | 0 | 4 | 0 |
| ,, இரண்டாம் பாகம் | 0 | 5 | 0 |
| கலைமகள் கதாவாசகம் முதல் புத்தகம் ... | 0 | 2 | 6 |
| ,, மூன்றாம் புத்தகம் ... | 0 | 4 | 0 |
| ,, நான்காம் புத்தகம் ... | 0 | 4 | 0 |
| பாலர் கணிதம் Book I Tamil & Telugu ... | 0 | 5 | 0 |
| ,, II ... ... | 0 | 6 | 0 |
| ,, III ... .. | 0 | 7 | 0 |
| ,, IV ... ... | 0 | 8 | 0 |
| ,, V ... ... | 0 | 9 | 0 |

## சென்னை
## எடுகேஷனல் பப்ளிஷிங் கம்பெனியார்

| தமிழ் பிரசுரங்கள் | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சுவாமி விவேகானந்தர் ... ... | 0 | 10 | 0 |
| கலைமகள் நற்றமிழ் வாசகத்திரட்டு for Form IV | 0 | 10 | 0 |
| ,, ,, ,, V | 0 | 12 | 0 |
| செந்தமிழ் இலக்கணம் Book I | | | |
| திரு. ராகவாசாரியார் (I, II, III பாரங்களுக்கு) | 0 | 8 | 0 |
| ,, for IV பாரம் ... | 0 | 5 | 0 |
| பெஞ்சமின் பிராங்க்லின் ... ... | 0 | 6 | 0 |
| ஆப்ரஹாம் லிங்கன் ... ... ... | 0 | 6 | 0 |
| விசித்திர விளக்கு ... ... ... | 0 | 6 | 0 |
| இந்துஸ்தானத்து வீரர் ... ... | 0 | 5 | 0 |
| சந்திரகுப்தர் ... ... ... | 0 | 4 | 0 |
| நீதிக் கட்டுரைக்கோவை முதற்பாகம் ... | 0 | 4 | 0 |
| ,, இரண்டாம்பாகம் ... | 0 | 7 | 0 |
| கலைமகள் நீதிக்கதைகள் ... ... | 0 | 4 | 0 |
| உலக அதிசயங்கள் ... .. ... | 0 | 4 | 0 |
| முப்பெரும்புலவர் ... ... ... | 0 | 4 | 0 |
| வாழ்க்கைச் சரிதை ... ... ... | 0 | 4 | 0 |
| கலைமகள் வாசகம் 1-ம் வகுப்பு ... ... | 0 | 2 | 6 |
| ,, 2-ம் ,, ... .. | 0 | 3 | 0 |
| ,, 3-ம் ,, ... ... | 0 | 4 | 0 |
| ,, 4-ம் ,, ... ... | 0 | 5 | 0 |
| ,, 5-ம் ,, ... ... | 0 | 6 | 0 |
| தமிழ் இலக்கணம் ... ... | 0 | 4 | 0 |
| கலைமகள் கணிதநூல் Book I ... ... | 0 | 5 | 0 |
| ,, II ... ... | 0 | 6 | 0 |
| ,, III ... ... | 0 | 8 | 0 |
| ,, IV ... ... | 0 | 9 | 0 |
| வடஆர்காடு ஜில்லா பூகோளம் Tamil & Telugu | 0 | 4 | 0 |
| செங்கற்பட்டு ஜில்லா பூகோளம் ... ... | 0 | 5 | 0 |
| இந்துதேச சித்திரசரித்திர கதைகள்-முதற்பாகம் | 0 | 4 | 0 |
| ,, இரண்டாம் பாகம் | 0 | 5 | 0 |
| கலைமகள் கதாவாசகம் முதல் புத்தகம் ... | 0 | 2 | 6 |
| ,, மூன்றாம் புத்தகம் ... | 0 | 4 | 0 |
| ,, நான்காம் புத்தகம் ... | 0 | 4 | 0 |
| பாலர் கணிதம் Book I Tamil & Telugu ... | 0 | 5 | 0 |
| ,, II ... ... | 0 | 6 | 0 |
| ,, III ... .. | 0 | 7 | 0 |
| ,, IV ... ... | 0 | 8 | 0 |
| ,, V ... ... | 0 | 9 | 0 |